9th February 1959]

(*b*) the number of boats distributed to each of the places in the district ; and

(*c*) the number of boats distributed to Cuddalore areas?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) Five.

(*b*) Sonakuppam—Two.

Killai—One.

Porto Novo—One.

Cuddalore—One.

(*c*) Three.

*Nathaswaram*

*127 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) நாதஸ்வரம் செய்யும் தொழிலை வளர்க்கத் திட்டம் ஏதேனுமுண்டா ?

(ஆ) அப்படியானால், அதன் விவரம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI A. VEDARATHNAM : இந்தத் தொழில் தெரிந்தவர்கள் மிகச்சிலரேயிருப்பதால் இந்த நாதஸ்வரம் செய்கிற தொழிலுக்கு நாம் புத்துயிர் கொடுக்கவில்லையானால் அடுத்த தலைமுறையில் இந்த வேலை செய்கிற ஆட்களே இல்லாமல் போய்விடுவார்கள். அதற்கு அரசாங்கம் என்ன ஏற்பாடு செய்ய யோசித்திருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எனக்குத் தெரிந்த வரையில் இந்த தொழிலில் ஈடுபட்டிருக்கிறவர்கள், தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள நரசிங்கம்பேட்டை என்ற கிராமத்தில்தான் செய்கிறார்கள். இதைச் செய்வதில் கஷ்டமொன்றுமில்லை. வீணை செய்வது போல் அல்ல. மேலும் அகிலயிந்தியா ஹாண்ட்டிகிராப்ட்ஸ் போர்ட் அரசாங்க உதவிபெற்று சங்கீதவாத்யாலயம் ஒன்றை சென்னையில் அமைத்திருக்கிறது. அதிலுள்ள மாணவர்களுக்கு சங்கீத கருவிகள் செய்ய சொல்லிக்கொடுக்கப்படுகிறது. அதில் நாதஸ்வரமும் செய்யலாம்.

SRI M.R. KANDASWAMI MUDALIYAR: இது, கலைகளில் மிகச் சிறந்த கலையாக இருப்பதால் இது வளர்ச்சி பெறுவது அவசியம். ஆகவே இந்தக் கலையில் பயிற்சி பெறக் கூடியவர்களுக்கு அரசாங்கம் ஏதாவது ஒத்தாசை புரிகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது, நாதஸ்வரம் செய்வதைப் பற்றிய கேள்வி. கலையைப் பற்றியதல்ல. கலைப் பயிற்சிக்கு ஆதரவு கொடுக்க தேவஸ்தானங்கள் சார்பாக ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகிறது.

[9th February 1959

SRI V. K. KRISHNAMURTHY : இசைக் கருவிகளில் ஒன்றாகிய யாழ் உற்பத்தி செய்வதற்கு அரசாங்கம் தனி முயற்சி எடுத்து உதவி செய்யமுடியுமா என்று கேட்டுக்கொள்வதுடன் இது மிகவும் கடுமையானது என்று அமைச்சர் அவர்களே கூறியிருப்பதால் தனியாக இதற்கு சலுகைகள் கொடுப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஆம், அதற்கு கூட்டுறவு சங்கங்கள் அமைக்கப்பட்டு வேண்டிய ஆதரவு அளிக்கப்பட்டு வருகிறது.

*Ambar charkas*

*128 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) இந்த மாநிலத்திற்கு ஆண்டுதோறும் எத்தனை அம்பர் ராட்டை தேவையாயிருக்கிறது ?

(ஆ) இவை எங்கே செய்யப்படுகின்றன ?

(இ) இதற்குத் தேவையான இரும்பு உறுப்புகள் இங்கே தயாராகிற,தா ? இல்லையெனில் எங்கிருந்து வருகிறது ?

(ஈ) அவற்றை இங்கே தயாரிக்க என்ன முயற்சி எடுக்கப்பட்டிருக்கிறது ?

(உ) எப்போது அவ்வேலை பூர்த்தியாகும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Nine thousand Ambar charka sets will be required by this State during 1958–59 and 21,000 Ambar charka sets will be required during 1959–60.

(*b*) At present, complete Ambar charkha sets are manufactured at the Saranjam Karyalayas at Guindy in Madras and Pettai in Tirunelveli district. The remaining four Saranjam Karyalayas at S.V. Nagaram in North Arcot district, Vadalur in South Arcot district, Tirupur in Coimbatore district and Tiruchirappalli in Tiruchirappalli district will start production of complete Ambar charka sets early this year.

(*c*) The metallic parts required for the manufacture of Ambar charkha sets are not manufactured in this State at present. The metallic parts required by the Saranjam Karyalayas for the manufacture of Ambar Charkha sets are now being purchased from the Khadi and Village Industries Commission.

(*d*) This Government have set up a Central Workshop at Madras for the manufacture of the metallic parts required for assembling of Ambar charka sets.

(*e*) Even though the construction of the building for the Central Workshop at Madras has been completed, the workshop could not start functioning for want of certain machinery required for the manufacture of the metallic parts for the Ambar charka sets. These items of machinery are not available in India at present and they have to be imported from foreign countries such as United Kingdom, Germany, etc. As sanction of foreign exchange is necessary, this Government have taken up the matter with the Union Government. Orders of the Government of India for the sanction